16th August 1960]

SRI N. K. PALANISAMI: Sir, the Hon. Minister while answering a supplementary question the other day said that supplementary questions could be put on the report of the Inspector-General of Police when it was received. Now he wants to go back upon what he has stated. May I presume that it is due to the adverse comment on the conduct of the police when Mr. Fredric March was arrested?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: I can assure the hon. Member that there is no adverse comment on the conduct of the police. As I have stated in my answer, a statement has been placed on the table of the House giving full facts and on that supplementaries could be put.

*State trading in foodgrains*

* 199 *Q.*—SRI A. A. RASHEED: Will the Hon. the Minister for Home be pleased to state whether any arrangements have been made with the State Trading Corporation in regard to trading in foodgrains?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: No, Sir.

SRI A. A. RASHEED: May I know whether Government have given up trading by the State Trading Organisation in foodgrains?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: I can only tell the hon. Member that there is no procurement of foodgrains now so far as this State is concerned?

*Publication of Text-books by the Government*

* 201 *Q.*—SRI M. P. SARATHI: } கனம் நிதி அமைச்சர்
SRI S. M. ANNAMALAI: }
அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) பள்ளிப் பாடப் புத்தகங்களை அரசாங்கமே வெளியிடும் திட்டத்தின்படி 1960-ல் எத்தனை புத்தகங்கள் வெளியிடப்பட்டன?

(ஆ) எந்தெந்த வகுப்புகளுக்கு?

THE HON. SRI C. SUBRAMANIAM: (அ) & (ஆ) Government have published the English Text Book for Standard V in the current year.

SRI S. M. ANNAMALAI: இப்பொழுது வெளியிடப்பட்டுள்ள புத்தகம் "ஸிலபஸ்" படி வெளியிடப்படவில்லை என்று சொல்லப்படுகிறதே. அது, உண்மையா? ஐந்தாம் வகுப்புக்குக் கணக்குப் புத்தகம் "ஸிலபஸ்" படி வெளியிடப்படவில்லை என்று சொல்லப்படுகிறதே அதுவும் உண்மையா?

THE HON. SRI C. SUBRAMANIAM: அரசாங்கம் வெளியிட்டது ஆங்கிலப் புத்தகம் மட்டும்தான். மற்ற புத்தகங்களைத் தனிப்பட்டவர்கள் வெளியிடுகிறார்கள். அவைகளில் ஏதாவது குறை இருந்தால், அது தனிப்பட்டவர்கள் செய்த குறையாகத் தான் இருக்க முடியும்.

[16th August 1960

SRI A. VEDARATHNAM: அரசாங்கம் வெளியிடுகிற அந்தப் புத்தகங்கள் உரிய காலத்தில் பள்ளிகளில் கிடைக்காமல் மிகவும் கால தாமதம் ஆகிக் கிடைப்பதால், "ஸிலபஸ்" பிரகாரம் பாடங்கள் நடத்த முடியாத நிலை ஏற்படுகிறது. ஆகவே, பள்ளிகள் திறக்கப்படுவதற்கு முன்னதாகவே அவைகளைக் கிடைக்கும்படி செய்ய அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: ஒரு புத்தகம் தான் சர்க்கார் வெளியிட்டிருக்கிறது. இந்தப் புத்தகம் காலம் தாமதித்துக் கிடைத்ததாக இதுவரை எனக்குப் புகார் வரவில்லை.

SRI K. ANBAZHAGAN: அரசாங்கம் வெளியிடுகிற இந்தப் புத்தகங்களை சில ஜில்லாக்களில் விற்பதற்கான முழு உரிமையைத் தனிப்பட்ட புத்தகக் கம்பெனிகளுக்குக் கொடுத்திருக்கிறார்களா? அப்படிக் கொடுத்திருந்தால் உரிய காலத்தில் பள்ளிக்கூடங்களுக்குப் புத்தகங்கள் கிடைக்கவில்லை என்ற குற்றச்சாட்டு அமைச்சர் அவர்களுக்கு வந்திருக்கிறதா?

THE HON. SRI C. SUBRAMANIAM: ஒவ்வொரு ஜில்லாவுக்கும் ஒவ்வொரு புத்தகக் கம்பெனிக்கு உரிமை வழங்கப்பட்டிருக்கிறது. ஆனால் அதிலே குறைகள் இருந்ததாக இதுவரை எனக்குப் புகார் வரவில்லை.

SRI K. B. S. MANI: ஸார், அரசாங்கம் புத்தகம் எழுதி வெளியிடும்போது, ஏக காலத்தில் மாகாணம் பூராவிலும் ஒரு வகுப்புக்கு ஒரே மாதிரியான புத்தகம் எழுதி வெளியிடப்படுகிறதா? அல்லது பல பேர்கள் எழுதிய பல மாதிரிப் புத்தகங்கள் ஒரே வகுப்புக்கு எழுதி வெளியிடப்படுகிறதா?

THE HON. SRI C. SUBRAMANIAM: இப்பொழுது ஒரு புத்தகம் தான் வெளியிடப்பட்டிருக்கிறது. அது எல்லாப் பள்ளிக்கூடங்களுக்கும் ஒரே மாதிரியான புத்தகம்தான்.

SRI K. ANBAZHAGAN: ஒவ்வொரு ஜில்லாவுக்கும் ஒரு கம்பெனிக்குப் புத்தகம் வழங்குவதற்கான வாய்ப்பு அளித்திருப்பது முறை தான். ஆனால், மூன்று, நான்கு ஜில்லாக்களுக்குச் சேர்ந்து அந்த உரிமை ஒரே கம்பெனிக்கு அளிக்கப்பட்டிருக்கிறது என்று தெரிந்தால், அதுபற்றி விசாரிக்கப்படுமா?

THE HON. SRI C. SUBRAMANIAM: இதிலே, எந்தெந்த கம்பெனிக்காரர்கள் என்ன கமிஷன் விகிதத்திற்கு இந்தப் புத்தகங்களை வழங்கத் தயாராயிருக்கிறார்கள் என்று டெண்டர் கேட்டு அந்த முறையிலே வழங்கப்பட்டிருக்கிறது. சில ஜில்லாக்களுக்கு ஒருவரும் முன்வராமலிருந்தால், வேறு ஜில்லாவிலுள்ள கம்பெனிக்கு அந்த உரிமை கொடுக்கப்பட்டிருக்கலாம்.

[16th August 1960]

SRI S. M. ANNAMALAI : அந்த ஆங்கிலப் புத்தகத்தின் விலை என்ன ? விலை நிர்ணயிக்கும் போது அதே விலைக்குத்தான் விற்க வேண்டும் என்று வியாபாரிகளுக்குச் சொல்லப்பட்டதா? அப்படிச் சொல்லப்பட்ட பிறகும் கூட, அந்தப் புத்தகம் வியா பாரியிடம் கிடைக்காமல், பிளாக் மார்க்கெட்டில் கிடைத்தது என்பது சர்க்காருக்குத் தெரியுமா?

THE HON. SRI C. SUBRAMANIAM : இது புதிதாக கனம் அங்கத்தினர் சொல்லக்கூடிய புகார். அந்தப் புத்தகத்திற்கு விலை நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. 65 நயே பைசே என்பது எனக்கு ஞாபகம். அந்தப் புத்தகத்திலேயே அதன் விலை அச் சடிக்கப்பட்டிருக்கிறது. எத்தனை புத்தகங்கள் வேண்டுமானு லும், எந்த இடத்திற்கு வேண்டுமானாலும் அனுப்பத் தயாராக இருப்பதால், பிளாக் மார்க்கெட்டிலே வாங்கவேண்டிய அவசியம் இல்லை.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : With regard to nationalisation of text books, may I know what the policy of the Government is, Sir?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதற்கு முன்பே இதைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறேன். ஆரம்ப வகுப்புகளுக்கான புத்த கங்களை சர்க்காரே வெளியிடுவது என்று. இப்பொழுது ஒரே ஒரு புத்தகம் தான் வெளியிடப்பட்டிருக்கிறது. இந்த ஆண்டில் இன்னும் சில புத்தகங்களை வெளியிட உத்தேசம் இருக்கிறது. இந்த அனுபவத்தை வைத்துக்கொண்டு கொள்கையை வகுக்க வேண்டியதாக இருக்கிறது.

SRI A. A. RASHEED : May I know the total amount realised by the sale of these books and the net profit derived thereby?

THE HON. SRI C. SUBRAMANIAM : It is too early to say anything.

SRI A. VEDARATHNAM : எ.எஸ்.எல்.ஸி. வகுப்புகளுக்குத் தமிழ்ப் பாடப் புத்தகம் அரசாங்கம் வெளியிடுகிறதா? அது இந்த ஆண்டு உரிய காலத்தில் வராமல் இரண்டு மாதங்கள் தாமதப்பட்டு சில பள்ளிக்கூடங்களுக்குக் கிடைத்திருப்பது அரசாங்கத்தின் கவனத்திற்கு வந்ததா? இனியாவது அம் மாதிரித் தாமதம் இல்லாமல் வெளியிட அரசாங்கம் முன் வருமா?

THE HON. SRI C. SUBRAMANIAM : அந்த விவரம் என்னிடம் இல்லை. என்னிடத்தில் இப்பொழுதிருக்கும் விவரத்தை வைத் துக்கொண்டு சொல்லவேண்டுமானால், ஒரு ஆங்கிலப் புத்தகம் தான்—ஐந்தாவது ஸ்டாண்டர்டுக்கு—சர்க்கார் வெளியிட்டிருப் பதாகத் தகவல் இருக்கிறது. கனம் அங்கத்தினர் குறிப்பிட்டது பற்றி எழுதியனுப்பினால் அதுபற்றி விசாரிக்கலாம்.

TRUTH ALONE TRIUMPHS